SRI K. VINAYAKAM : Sir, is the Hon. Minister aware of the fact that, even though some seats have been allotted to students coming from South Africa, there is no possibility of those students getting admitted in our Universities because there is no High Commissioner of that Country here to represent their case? Will the Government of Madras bestow any attention at least in the next year so that their case may not go without being taken into consideration?

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, any application coming from South Africa will be considered. Genuine cases, even though there may not be any High Commissioner here, I am sure, will be properly represented through some other diplomatic channel.

11-10 a.m. SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know from the Hon. Minister for how many years more these reservations will continue?

THE HON. SRI C. SUBRAMANIAM : As far as Mysore, Kerala and Andhra Pradesh States are concerned, they are governed by the States Reorganization Act and a time-limit has been fixed; but I do not exactly remember just now what the time-limit is. But as far as the other territories—Jammu and Kashmir, Union Territories, Burma, Ceylon, F.M.S. and South Africa—are concerned, I hope the reservation will continue indefinitely.

SRI M. S. SELVARAJAN : இவ்வாறு ரிசெர்வ் பண்ணப்பட்ட ஸ்தானங்கள் அனைத்தும் இவ்வருஷம் பூர்த்திசெய்யப்பட்டனவா ? குறிப்பாக, இலங்கையிலிருந்து தாயகம் திரும்பும் மாணவர்களுக்காக ரிசெர்வ் பண்ணப்பட்ட ஸ்தானங்கள் பூர்த்திசெய்யப்பட்டனவா ? அவை எந்த அடிப்படையில் பூர்த்திசெய்யப்பட்டன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : A separate question may be put.

SRI A. GOVINDASAMY : நம் தாயகத்திலிருந்து இலங்கைக்கு சென்று அங்கே குடியேறியவர்கள் இங்கே திரும்பிவந்தால், அவர்களுக்கு இக்கல்லூரிகளில் விசேஷச் சலுகை அளிக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நம் குடிகள் இலங்கைக்குச் சென்று அங்கே கொஞ்ச நாட்கள் தங்கியிருந்துவிட்டு இங்கே திரும்பி வந்தால், அவர்களுக்கு நமக்கு உள்ள சலுகைகள்தான் கொடுக்கப்படும். இலங்கையைச் சேர்ந்த மாணவர்களுக்கெனத் தனியாக ஒதுக்கப்பட்டுள்ள ஸ்தானங்களைப் பற்றியது மூலக் கேள்விகள்.

*Arrears of land revenue*

*678 Q.—SRI K. SATTANATHA KARAYALAR (on behalf of Sri K. Ramachandran) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the arrears of land revenue fasli-war in Paramakudi, Ramanathapuram, Sivaganga and Mudukulathur taluks;

(b) the number of cases of distraint of standing crops in the said taluks up to 15th February 1958 for collection of arrears of land revenue; and

29th October 1958]

(c) the number of cases of criminal proceedings launched against the ryots during this fasli?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a), (b) & (c) A statement [a] is placed on the table of the House.

*"Vaniars" and "Sourashtras"*

* 679 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை கல்வி விதிகளுடன் இணைத்துள்ள அதிக பிற்பட்ட வகுப்பினர்களின் பட்டியலில் தங்கள் வகுப்பையும் சேர்த்துக்கொள்ளும் படி—வாணியர், சௌராஷ்டிரர் வகுப்பினர் சமீபகாலத்தில் செய்துகொண்ட முறையீட்டினை சர்க்கார் பெற்றுக்கொண்டார்களா ?

(ஆ) அப்படியானால், அதன் மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படது ?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir.

(b) The Government have deferred for the present question of inclusion of the "Vaniar" and "Sourashtra" Communities in the list of "Most Backward" Classes.

SRI A. V. P. ASAITHAMBI : சமூகத்தினரை முற்பட்டவர்கள், பிற்பட்டவர்கள், மிகப் பிற்பட்டவர்கள் என்று பிரித்து கல்விச் சலுகைகள் அளிப்பதானது, ஜாதிப் பிரிவுகளை நிரந்தரமானவையாக ஆக்கக்கூடியதாக இருப்பதால், சமூகத்தினரில் எல்லோருக்கும் கல்லூரி வரையில் இலவசக் கல்வி அளிப்பதற்கு அரசாங்கம் திட்டம் வகுக்குமா ? அவ்வாறு செய்வது, ஜாதிப் பிரிவுகள் ஒழிய ஏதுவாக இருக்குமே ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : இது சம்பந்தமாக மத்திய அரசாங்கத்திற்கு எழுதப்பட்டிருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. பிற்பட்ட வகுப்பினர் கமிஷனின் ரிப்போர்டின்படி, அதிகப் பிற்பட்ட வகுப்பினர் பட்டியலில், தகுதியுள்ளவர்களை மாநில அரசாங்கமே சேர்த்துக்கொள்ளலாம். அப்படியிருக்கும்போது மாநில அரசாங்கத்தார் ஏன் அவ்வாறு செய்யவில்லை ? மாநில அரசாங்கத்தார் மத்திய அரசாங்கத்திற்கு ஏன் எழுத வேண்டும் ? இதை மாநில அரசாங்கத்தாரே செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : பொருளாதார அடிப்படையில்தான் இந்தப் பாகுபாடுகளைச் செய்யவேண்டுமென்று மத்திய அரசாங்கத்தாரே சொல்லியிருக்கிறார்கள்.

SRIMATHI HEMALATHA DEVI : தெலுங்கு செட்டியார் எனப்படுவர்களும், கள்ளர்களும், மறவர்களும் தங்களை அதிகப் பிற்பட்ட இனத்தவர் பட்டியலில் சேர்க்கவேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொண்டார்களே, அதுசம்பந்தமாக அரசாங்கத்தார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி கேட்கவேண்டும்.

---

[a] Printed as Appendix II on pages 79–81 infra.